உ

சிவமயம்.

கணபதிதுணை.

# போக்கலைச் செல்வவிநாயகர் பதிகம்.

# போக்கலை வள்ளிமணவாளர் திருவூசல்.

# போக்கலைக் குமரேசர் சோடசம்.

இவை

ஸ்ரீவன்றொண்டரவர்கள் மாணாக்கர்

காரைக்குடி ராம. சோ.

சொக்கலிங்கச்செட்டியாரவர்களால்

செய்யப்பெற்று

---

ஷையூர் ப. ராம. லெ. ராம.

இலக்குமணச்செட்டியாரவர்களால்

சிதம்பரம்

ஸ்ரீ குஞ்சிதசரணம் பிரஸில்

பதிப்பிக்கப்பெற்றது.

---

...வருஷ மார்கழிமீ கஉ

4- JAN
Q2:417
N28
78376

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# போக்கலைச்செல்வவிநாயகர்பதிகம்.

திருவளர வருள்வளரச் சிவம்வளர
நவநவமாச் சேர்வ்யா பாரப்
பொருள்வளரக் குடும்பநலம் புத்திரபாக்
கியம்வளரப் புனித தர்மத்
தருவளர வணிமகுட தனவசியர்
போக்கலையிற் றருகோ யிற்கண்
தெருள்வளர வமர்ந்தருளுஞ் செல்வவிநா
யகன்மலர்த்தாள் சென்னி சேர்ப்பாம். (க)

அடுத்தவருக் கிடர்ப்போக்கை யலைத்துநலந்
தருதலிற்போக் கலையென் பேரே
எடுத்துரைசெய் திருநகரி லிலங்குதிருத்
தனவசிய ரினந்தா பித்து
நடத்திவரு செல்வவிநா யகர்சங்கம்
நீடூழி நயந்து வாழ்சீர்
கொடுத்தருள்கென் றணையதனிக் குஞ்சரமா
முகனடிகள் குறித்து வாழ்வாம். (உ)

4- JAN 192
MADRAS
2717
894-8111

Microfilmed.



செல்வநிறை போக்கலையிற் றிகழ்மகுட
தனவசிய சீலர் செய்த
செல்வநிறை திருமடஞ்சீர்ச் செல்வவிநா
யகர்சங்கஞ் செய்ய தண்ணீர்ச்
செல்வநிறை பந்தர்முதற் றிருந்தறங்கண்
மேன்மேலுஞ் சிறப்புற் றோங்கச்
செல்வநிறை விநாயகரைத் தினந்தோறும்
பணிந்தேத்திச் சிந்தை செய்வாம். (௫)

போக்கலையின் அன்பர்கண்முன் போந்திறைஞ்ச
நேர்ந்தருளிப் புணர னாதிப்
போக்கலையைங் கரத்தமல புகலறியாச்
சிறியேமைப் புன்மார்க் கத்திற்
போக்கலைநின் றிருவடியே போற்றினிய
சன்மார்க்கம் புகுத்தி மேலும்
போக்கலையில் வாழ்செல்வப் புகர்முகத்தெம்
பகவவருள் புரிகு வாயே. (௬

இதன் கருத்து:—அன்பர், திருமுன்போந்து அல்லே—அஞ்ஞானஇருளே, போக்கு-நீக்கியருளென்றுவணங்க, அவர்க்கு அநாதியேபுணர்ந்த போக்கு—(மலக்)குற்றத்தை, அலை—அலைக்கின்ற (நீக்கியருள்கின்ற) ஐந்துகை அமலனே! போக்கலை என்னுந் தலத்தில் வாழ்கின்ற யானைமுகத்து எமதுபகவனே புகலிடம்அறியாச் சிறியேங்களைப் புன்மார்க்கத்து—இழிந்தமார்க்கங்களில், போக்கலை—போக்காதே, நின்திரு

டியை அன்றி வேறொன்றையும் நாடாத சைவசன்மார்க்கத் ற்புகுத்தி (அதுசலியாமல்)நிலைபெறும்படி மேலும் அருள் ரிகுவாய் என்பதாம். (௪)

மீக்கலைதேர்ந் தவர்பலகால் *வீணாள்ப
டாமைமுதல் விளம்பி வீணாள்
போக்கலையென் றொருவருக்கும் புகலுமொழி
திகழ்தலினப் பொருந்து மோசை
தேக்கலையோர்ந் ததுபெயராச் செப்பியவப்
பொற்பதியிற் றிகழ்ந்து செல்வம்
ஆக்கலைநன் றருள்செல்வ வைங்கரத்தான்
பங்கயத்தாட் கன்பு செய்வாம். (ரு)

* "வீணாள் படாஅமை நன்றாற்றி னஃதொருவன்— வாணாள் வழியடைக்குங்கல்" என்னுந் திருக்குறள்முதலிய நூல்களை விளம்பி, வீணாள் போக்காதேயென்று ஒவ்வொரு வருக்கும் புகல்மொழி என்க.

மிதுலையா சாஞ்சனகன் வேதாந்தம்
பலவற்றை விகற்பி யாதோர்
முதுவுணர்வி லாதந்தோ நான்பிரம
மென்றகந்தை முறுகா நிற்ப
வதுதெரிநா ரதர்வேண்டி யாங்கவனை
யடுத்துமய லகற்றி யாண்ட
விதுமுடிபோக் கலைச்செல்வ விநாயகன்சே
வடிமலர்கள் விரும்பி வாழ்வாம். (௬)

இதன் கருத்து:-சனகன், பலவேதாந்தங்களையும்,ஒன்றை மற்றொன்று விரோதியாமல் தாற்பரியத்தில் ஒத்துநிற்கும் உண்மையை ஊகித்துணரும் பேறின்றி, நானே பிரம மென்று அகந்தை முதிர்ந்து நிற்பவும், அதுதெரிந்த நாரதர் வேண்டியபடி, அச்சனகனை அடுத்து உணவளிக்கமாட்டாமை காட்டிஅவ்வகந்தைமயக்கம்நீக்கியாண்டவிநாயகன் விதுவை முடியிலணிந்த விநாயகன் என்பதாம். விது—சந்திரன். (௬)

வேதவே தாந்தங்கள் விமலபதி
சமலபசு மெய்ம்மை யென்றே
யோதலுமோ ராதந்தோ ஆழ்வஙியா
ணும்பரமென் றேறி யேதற்
போதநிலை மிக்ககந்தை பூண்டசன
கற்குமருள் புரிந்த ளித்த
மேதகுபோக் கலைச்செல்வ விநாயகன்முட்
கமலமலர் விரும்பி வாழ்வாம். (எ)

அரசுபுரி பெருஞ்செல்வ னாகியும்வேண்
டொருபனவ னும்ம னக்கும்
ஒருபொழுதை யுணவேனு முதவும்விதி
யின்றிமய லுறாநீ தான
பிர்மமலப் பசுநீகொள் பிரமத்திற்
சிவஞானப் பெருந்தீ வையென்
றருள்புரிபோக் கலைச்செல்வ வாம்பன்முகன்
பூம்பதமே யடுத்து வாழ்வாம். (அ)

இதன் கருத்து:—சனகனையடுத்து நீ பெருஞ்செல்வனுகி யும் உன்னிடம் வேண்டிய ஒரே பிராமணனுகிய எனக்கும் ஒருவேளை உணவுதாவிதியின்றி மயங்குகின்ற நீதானு பிரம மாவாய்? உண்மையுணாாதகந்தையுற்ற நீ, மலசகிதனுகிய ஒரு சிவனே! உன்னையே மலாகித பிரமமென்றெண்ணிக் கொண்ட பிரமத்தில் (அஞ்ஞானமயக்கத்தில்) சிவஞானத்தீ யிட்டுத்தகித்து மலரகித பிரமமாகிய சிவனடித்தொண்டு செய்துய்க வென்றருள்புரிந்த ஆம்பல்முகன் என்பதாம். ஆம்பல்—யானை. (அ)

சனகனகத் தான்மலைபோற் றருமுணவும்
வயிறுநிறை தாாமை யோர்த்தோர்
பனவனறு கானிறைந்த பலங்காட்டி
யன்பறநாம் பரமென் பார்செய்
நனியறமும் பயனிலவோ ரனுவெனினு
மன்பர்செயின் நலமே மல்கும்
எனவருள்போக் கலைச்செல்வ விபமுகவ
னிணையடிக ளிறைஞ்சி வாழ்வாம். (கூ)

இதன் கருத்து:—சனகன், நானேபிரமமென் றகந்தை வசத்தனு யன்பின்றி மலையளவாய்த்தந்தஉணவாலும் வயிறு நிறையாமை தெரிவித்தும், ஒருபிராமணன்தந்த ஒரே அறு கினுல் வயிறு நிறைந்து அவனுக்குப் பெரும்பலனெல்லா முண்டான பெருமை நேரேகாட்டியும், இவ்விரண்டினுலும் அன்பில்லாமல் நாமேபிரமமென்பவர்கள் பெருந்தருமஞ்செய்

யினும் பயனிலவாயொழியுமென்றும், அன்பர்செயுந்தருமம் அணுவளவெனினும் அதனால்நன்மைகளே பெருகுமென்றும் காட்டியருளிய செல்வவிநாயகன் என்பதாம். (௯)

அகம்பிரமப் பேய்கோட்பட் டகந்தைமுதிர்
சனகனுக்கு மருள்வே தாந்தத்
தகுந்தெளிவாஞ் சித்தாந்தந் தனைவிளக்கி
யுயர்ஞான சனக னென்பேர்
உகந்துரைப்ப வாட்கொண்ட வும்பன்முகத்
தெம்பாம னுறுசீர் மேன்மை
திகந்தமொளிர் போக்கலைவாழ் செல்வவிநா
யகன்மலர்த்தாள் சென்னி சேர்ப்பாம். (௧௦)

தனதுவிருப் பறிவுசெயற் சத்திகளே
யிருபாலுஞ் சார்*வா மத்தும்
வனிதையராய்ச் சித்திபுத்தி வல்லபையென்
றிருப்பெயரின் வயங்க வன்னார்
இனியமண மகனுய்விற் றிருந்தருளிப்
பரிந்தன்ப ரிடர்தீர்த் தாளும்
அனகனைப்போக் கலைச்செல்வ னைங்கரனை
யங்கைகுவித் தடுத்து வாழ்வாம். (௧௧)

*வாமம்--தொடை.

முற்றிற்று.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# போக்கலை வள்ளிமணவாளர் திருவூசல்.

சீர்வளர்பே ரொளிவயிரங் கால்க ளாகத்
　　தெளிவுவளர் செம்பவளம் விட்ட மாக
நீர்வளர்நித் திலக்கோவை வடங்க ளாக
　　நிறம்வளர்மா ணிக்கஞ்சூழ் சட்ட மாக
ஏர்வளர்பன் மணிகள்பல வங்க மாக
　　விசைவளர்போக் கலைவணிக ரியற்றி னால்
வார்வளர்பூங் கோதையனை தெய்வ யானை
　　வள்ளிமண வாளரே யாடீ ரூசல். (க)

நன்பொன்னு நவமணியு முதல வாய
　　நற்பொருள்கள் பற்பலவு நனிமிக் கோங்க
அன்பொன்று மகுடதன வசிய ராய
　　அணிநகரத் தார்கள்போக் கலைநல் லூரில்
இன்பங்கள் விரிதருமா புரிபொற் கோயி
　　லிற்பணிவார்க் கின்பருளே யென்று நல்கி
மன்பங்க யக்கணனை தெய்வ யானை
　　வள்ளிமண வாளரே யாடீ ரூசல். (உ)

நான்மறைக ளேபரந்த பலகை யாக
நவிலுறும்வே தாந்தமேற் பீட மாக
மேன்மைதரு சிவாகமங்கள் வெண்பட் டாக
மெய்தருமைந் தெழுத்துவிரை மலர்க ளாக
ஆன்மகிழுந் தாதையனை யூச லாட
அவர்நடுவீற் றிருந்தருளி யாடு வீர்சீர்
வான்மருவு போக்கலைவாழ் தெய்வ யானை
வள்ளிமண வாளரே யாடீ ரூசல். (௩)

பொதுநீக்கிச் சிறப்பாக்கிச் சலியா தென்றும்
பொலிந்துவளர் பேரன்பாம் பொன்னூண் பூட்டி
முதுநூற்சென் னெறியடிய ரிதய மாகு
முதலூச றனிலிருத்த முன்னின் றூடற்
புதமூர்த்த குமாரரே பல்வ ளஞ்சால்
போக்கலையின் பாக்கலையே புரிந்து வாழும்
மதிநோக்கு மதிவதன தெய்வ யானை
வள்ளிமண வாளரே யாடீ ரூசல். (௪)

பிறவிபல புக்குழன்று மாதர்ச் சேர்ந்து
பிள்ளைகளைப் பெறுந்தேவ ரின்பம் வேண்டி
அறைகழல்போற் றிடவருண்மா தேவ னெங்க
ளண்ணனுதற் கண்ணனன்மெய் யாக வந்து
நறைகமலத் திருவூசன் மேவி வாவி
நளிரலைக ளாட்டிடவாங் காடல் செய்த
மறைபுகழ்போக் கலைவாழுந் தெய்வ யானை
வள்ளிமண வாளரே யாடீ ரூசல். (௫)

பதிபசுபா சம்மூன்று மெய்யே யென்று
பலகலையா கமவேதம் பகர்தல் யாரும்
நிதரிசனத் தோர்ந்துய்வா னுடல்க ளாய
நிரைநிரைய வூசலிற்ப லுயிரை வைத்து
விதிநெறியில் வினைக்கயிறூர்த் தாட்டு கின்ற
விமலரே போக்கலையில் மேவி வாழும்
மதிதருநன் மதிவதன தெய்வ யானை
வள்ளிமண வாளரே யாடி ரூசல். (௬)

பூதமொரைந் திருவகையிந் தியங்கள் பத்தும்
புலனைந்துங் கரணநான் கிவைநா லாறும்
ஓதுறுகீழ்ப் பரப்பாகக் கலாதி யேழும்
மொளிர்பீட மாகமே லோங்கு வித்தை
யாதியைந்தும் விரிப்பாமே லிருந்துஞ் சாரா
தமர்ந்தருளி யவ்வவுயிர்க் கருளே நல்கி
மாதகைய போக்கலைவாழ் தெய்வ யானை
வள்ளிமண வாளரே யாடி ரூசல். (௭)

பரைமுனிவு தீர்ந்தினரு டருவான் வேண்டி
பரைபானுப் பண்ணுமது பால ரூபம்
மருவுறுசோ மாக்கந்த வடிவந் தன்னை
மனத்திருத்தி நோற்குநாண் மால்பா லாழித்
திரையொடவன் சுவாசவளி யாட்ட வாங்குத்
திகழவிருந் தாடியருள் செல்வ ரேதே
வரும்விழைபோக் கலைவாழுந் தெய்வ யானை
வள்ளிமண வாளரே யாடி ரூசல். (௮)

நிலமுதனு லாறுதத் துவங்க ளுபி
நின்றெழுமெண் விரனுளங் கலாதி வித்தை
சலனமிலெட் டிதழீச சதாசி வங்கே
சரமறுபா னுன்குசத்தி பொகுட்டு வித்தாங்
கிலகுறுமைம் பானென்றுஞ் சிவமா மன்ப
ரிதயகம லங்கடொறு மினிது மேவி
மலரருள்செய் போர்க்கலைவாழ் தெய்வ யானை
வள்ளிமண வாளரே யாடி ரூசல் (௯)

மலிவளமார் போக்கலைமா நகரம் வாழ
மகுடதன வணிகர்பொருண் மல்கி வாழ
நிலவுமவர் புரிகோயி லீடு வாழ
நிறைசெல்வ விநாயகர்பே ருண்முன் வாழ
நலமணிநீ றைந்தெழுத்து நயந்து வாழ
நான்மறையா கமசைவ நன்கு வாழ
மலர்மணம்போன் றிடம்வலஞ்சார் தெய்வ யானை
வள்ளிமண வாளரே யாடி ரூசல். (௰)

முற்றிற்று.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# போக்கலைக் குமரேசர் சோடசம்.

பொன்னார் மணிமார் பரிமுதலோர்
போற்றற் கரிய பொருளாயும்
மன்னு தூரவான் மகுடதன
வணிகர் புரிபோக் கலைக்கோயி
லின்னார்ந் தின்பே தருமுருகா
வெளியே யிடர்தீர்த் தின்பருள்வாய்
மின்னு ரயில்வேற் றிருக்கரத்தெம்
விமலா குமர நாயகனே. (க)

அருளே புரிவ துன்னியற்கை
யறியாச் சிறியே மடியேங்கள்
மருளா லபசா ரஞ்செயினு
மாற்றி யருள்வ துன்கடனே
தெருளாச் சேயை முனியினுந்தாய்
சென்றுங் கணைப்ப தவள்கடனே
பொருளார் தருபோக் கலைவாழும்
புனைவேற் குமர நாயகனே. (உ)

18376

இனிய மறைசுப் பிரமணியோ
    மென்று போற்று நின்பெருமை
தனைநன் குணர்ந்து சார்ந்துய்யுந்
    தகுதி யில்லே மாதலினல்
அனக னீயே வலிதுவந்தீர்த்
    தருளி யிருடீர்த் தின்பருள்வாய்
கனியும் வளங்கூர் போக்கலைவாழ்
    கந்தா குமர நாயகனே. (ங)

வேத வேதாங் தங்களெலாம்
    விரிந்து முடித்தோர் பசுபதியென்
றோது சிவசத் திடத்துமைசித்
    தொளிரன் னவரின் பொருநீயே
யாத லாலின் புறுநிலையே
    யருள்வா யென்நின் னடிபணிந்தோம்
மோத வளங்கூர் போக்கலைவாழ்
    முதல்வா குமர நாயகனே. (ச)

இச்சை திகழ்ஞா னங்கிரியை
    யெனுமுச் சத்தி களைவலத்தும்
அச்செங் காத்து மிடத்திலும்வெற்
    பவர்மா னயில்குஞ் சரியுருவின்
வைச்சு நடுவிற் றிருந்தருளும்
    வள்ளா லருள்வாய் போக்கலைவாழ்
செச்சை புனைபன் னிருபுயத்தெஞ்
    செல்வா குமர நாயகனே. (ரு)

தானே தாயை விடாதென்றுஞ்
சாருங் குரங்கின் றகையிலன்றாய்
தானே மகவை யணைத்தருண்மார்ச்
சார கிலையே மேற்கொடுநீ
தானே யறியாச் சிறியேனைச்
சார்ந்தின் புறுசீர் தந்தருள்வாய்
தானே தனைநேர் போக்கலைவாழ்
தலைவா குமர நாயகனே. (சு)

*பரவெற் பிறைவ திருச்செந்தூர்ப்
பகவ திருவா வினன்குடிவாழ்
குரவ திருவே ரகத்தமல
குன்று தோறு டுங்குழக
விரவு பழங்க ளுதிர்சோலை
விமல வளர்போக் கலைவாழும
வரத வொருவா நலனருள்வாய்
வள்ளால் குமர நாயகனே. (எ)

* பரவெற்பு—பரங்குன்றம்.

மணிபொன் கொழித்து வருமயிரா
வதிமா நதிவாழ்ந் தெஞ்ஞான்றுந்
தணிவில் புனித நீர்வளமுன்
சார்ந்து செழிக்கும் போக்கலையில்

அணிய மகுட தனவணிக
ராற்று கோயி லமர்ந்தவர்செய்
பணிகொண் டருள்சண் முகருகனம்
பரம குமர நாயகனே. (அ)

சங்க நாத பிரணவமும்
சார்பைங் கிளியோ தெழுத்தைந்தும்
அங்க ணயிரா வதிப்பெருக்கு
மணிவெண் ணீறு மைந்தெழுத்துந்
தங்கள் முதலாக் கொள்வணிகர்
தமக்காங் கருள்செ யருள்வெள்ளம்
பொங்கி வரனேர் போக்கலைவாழ்
புநித குமர நாயகனே. (௯)

எங்குங் கழனி யுழவுநட
வின்ப நிறைசெந் நென்மலைகள்
எங்கும் பொருள்வேண் டுநர்க்குதவி
யிதமே புரிந்தம் முதல்பெருக்கல்
எங்குந் தருமம் பலபுரித
லிவைக ணிறைபோக் கலையமர்ந்தே
எங்கு நிறைந்தா யெமக்கருள்வா
யெந்தாய் குமர நாயகனே. (௧௦)

பொன்னே யுறுநஞ் சுவர்க்கமிது
போன்மோ நீருண் ணவிசருணெல்
பன்னேர் மலைக ளாயோங்கிப்
பதிநம் பதியைப் பணிந்துய்மின்
என்ன விண்ணோர்க் குணர்த்தலினு
டையின்மேற் கொடிசேர் போக்கலைவாழ்
மன்னே மணியே யின்பருள்வாய்
வரதா குமர நாயகனே. (கக)

ஓங்கு இப்பதி என்க.

தனதன தனனதன தாத்தன தனதான.

மரனமு னெரிவிழியின் வாய்ப்பொறி யனன்மேனிச்
சரவண பவகுமர சாற்றரு மகிமேச
குரவணி புயவசல கோட்டமி லருளேசெய்
புரவல நலனருள்க போக்கலை முருகோனே. (கஉ)

தானன தனதான தாத்தன தனதான.

வானவர் குலம்வாழ மாத்திற லசுரேசர்
ஆனவ ரினம்விட லாற்றிய தனிவீர
தீனனென் மலமாசு தீர்த்தரு ளுமைபால்கொள்
போனக குருநாத போக்கலை முருகோனே. (கங)

தானன தானன தாத்தன தனதான.

நீபபு யாசல நீத்துல குனைமேவுந்
தாபதர் சேவிய தாட்டுதி புரிவார்தஞ்
சோபவி நாசன தூப்பய னருள்வாய்பல்
பூபரு மாவல்கொள் போக்கலை முருகோனே. (கச)

தனதன தாத்ததன தனதன தனதான.

சிவனுமை நாப்பணொளி திகழ்சுக வடிவோனே
நவில்சுக வாழ்க்கைநினை நாடுநர் பெறுமா†செய்
பவவிடர் பாற்றியருள் பாடலி மூரல்சோலை
அவிர்தரு போக்கலையி லருள்புரி முருகோனே. (கடு

†செய்பவ—செய்பவனே என்க.

தனதன தாத்ததன தானன தனதான.

வளநிறை போக்கலையில் வாழ்தரு குமரேசா
பளகிரி மேற்புலவர் பாடல்கொள் பரநாயேன்
வெளிதுரை பாட்டிவையு மேவிநி னருடாராய்
எளியவர் வாட்டமற வேயருண் முருகோனே.

முற்றிற்று.

---


78376

A0407